

கதிர்வேற் கவிராயரவர்கள் பாடிய

உயிரெழுத்து

# சந்தத் திருப்புகழ்

## கீர்த்தனங்கள்.

இஃதை

சதாசிவபுரம் கிராமமுன்சீபு

வீரபத்திரய்யரவர்களால்

சேகரஞ்செய்யப்பட்டதை

பவித்திரம் மடாலயம் பட்டத்து

அப்பாவுசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு

ம் பட்டக்கார் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1923. [அணா 2.

உ

சிவமயம்.

வெற்றிவேலுற்ற துணை.



கதிர்வேற் கவிராயரவர்கள் பாடிய

உயிரெழுத்து

# சந்தத் திருப்புகழ் கீர்த்தனங்கள்.

இஃதை

சதாசிவபுரம் கிராமமுன்சீபு

வீரபத்திரய்யரவர்களால்

சேகரஞ்செய்யப்பட்டதை

பவித்திரம் மடாலயம் பட்டத்து

அப்பாவுசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு

சேலம் பட்டக்கார் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1923.

வெற்றிவேலுற்றதுணை.

# சிறப்புப்பாயிரம்.



சந்திரசேகர சுந்தராராகிய எந்தையாம்
சிவபெருமானுக்கும் மங்கையர் பணியும்
இங்கிதஞான துங்கதனத்து அம்மையாம்
உமாதேவியார்க்கும் நாப்பணமர்ந்து
நீங்காவுயிரென தூங்காவிழியென
பாங்காஞ்சேயென ஆங்காங்குருவென

நின்றெழுந்தருளிய ஸ்ரீ சுப்ரமண்யக்கடவுளின் திருவருட் பிரசாதம் பெற்ற இந்நூலாசிரியராகிய "கதிர்வேற் கவிராயர்" சுமார் இற்றைக்கு 100-வருடத்திற்கு முன் பாண்டிய நாட்டில் சைவ வேளாள குலத்தில் ஜெனித்தவர்.

உலகப் பிரசித்தி பெற்ற மதுரகவிராயரென்பாருக்கு இவர் மருமகனாக வாய்ந்தவர். இவர் சரித்திரம் விரிவாய்த்தெரியவில்லை. ஆயினும் சேலம் ஜில்லாவிற் பற்பல இடங்களில் பிரமுகர்களெல்லாம் புகழவும் இவர் பாடும் வசை கவிக்கு ஆளாய் உலோபியர்க ளழியவும் புகழுடன் வாழ்ந்து இறுதியில் ஆத்தூர் தாலூகா சார்வாய் கிராமத்தில் அக்காலம் பிரபல தனிகராயிருந்து வாழ்ந்த வெங்கடாசல நாயக்கர் வேண்டுகோளுக்கிணங்கி "தம் சார்வாய் கிராமத்தில்" வந்திருந்த காலத்து "ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுளார்" தம்பேரில் உயிரெழுத்து சந்தத் திருப்புகழும் ஷை கீர்த்தனங்களும் முறையே பாட உத்திரவானதின்பேரில் நியமத்துடன் அவ் வாக்கினைப்படியே நெல்லி விருக்கத்தின் மேலிருந்து இவ்வரிய பிரபந்தத்தைப் பாடி முடித்து இறங்கி வந்தனரெனத் தெரிகின்றன.

இவர் பேளூர் சுயம்புலிங்கமூர்த்தியின் பேரினும் வண்ணம், திருப்புகழ் முதலியதும் பாடியிருப்பதாகத் தெரிகிறது. அன்றியும் இவர் இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழினும் சொன்னயம், பொருணய முதலியவைகளை யமைத்துப் பாட வல்லவராயும், அநேக நாடகங்கள் பாடியிருப்பதாயும் தெரிவதோடு கௌமார விரதியாய் இருந்து வந்து பேளூருக்கடுத்த அத்தனூர்ப்பட்டி கிராமத்தில் சிவாதீனமடைந்தாரெனத் தெரிய வருகின்றன. இவர் இன்னாடு முற்செய்த நற்றவத்திலீங்குற்று பாடிய இவ்வரிய பிரபந்தமானது பக்திரசத்தில் எம்மனோரை மூழ்குவிப்பதாயிருப்பதால் இதனை பாராயணம் செய்து முருகனருள் பெற்றுய்வார்களெனக்கோரும்,

தமதன்புடைய,

S. A. வீரணையன்,

வைத்திய பண்டிட்,

சதாசிவபுரம்.



---

உ

கதிர்வேல் கவிராயர் உயிர் வர்க்க சந்தத் திருப்புகழ் பாடியதை

நாமக்கல் தாலூகா பவுத்திரம் அல்லமாப்பிரபு மடம்

## மகா-ள-ள-ஸ்ரீ வீரசைவம். அப்பாவையரவர்கள்

பாடிய

## சாற்றுக்கவி.

---

(ஆசிரிய விருத்தம்).

சீருற்ற வேதகலை பிரம்மாதி தேவரவர்
செப்பரிய சிவநாயகி
திங்கள் முடிகொண்டவள் பொன்னம்மை
[யென்னம்மை
ஜெயசூலி புகழோங்கு நற்
காருற்ற சோலைசூழ், சாருவாய், மேவியோர்
கந்தனுக் கடிமை பூண்டோன்
கதிர்வேலனென்று தரு-பேர் பெற்ற கவிராயன்
கனிந்து சொலு மகராதியாம்
ஏருற்ற உயிர்வர்க்க சந்தகவி முருகனை
யிறை நாம முறுதலாலே
இசைமேவு மறையந்த சிவசமய வத்துவித
வெழிலேறு சங்கமருவும்
நீருற்ற வயல் சதாசிவபுரத்ததிகார
நேய முனிசிப்ப னென்னும்
நேர்ந்த விறல் சைவனும் வீரபத்ரையதாம்
தேடிவெளி யாக்கினனரோ.

---

இஃது

சதாசிவபுரம் கி. மு. வீரபத்திர ஐயர் இயற்றிய,

## சாற்றுக்கவி.

---

(எழுசீர் ஆசிரிய விருத்தம்.)

பொங்கிய வளமுந் தேவரா லயமும்
புரமெனும் மனுக்களு அமர
தங்கியே ஆத்தூர் நாட்டினில் சார்வாப்
சதாசிவபுரச் சென்னியின் மலையில்
திங்களை யணிந்த சிவனருள் பாலர்
சிறப்புட னவ்விடஞ் சென்று
தங்கவே வந்த சண்முகர் பேரில்
தரணியில யாவரும் பணிய
செங்கையா லெழுதி செப்பிய கதிர்வேல்
செய்யுளாம் திருப்புகழ் பதத்தை
எங்குமே யாரு மியம்பிய பாடலை
எவர்களும் பாடியே துதிக்க
மங்கள மாக வானவர் புகழ
வணங்கியே யாவருந் தேட
சங்கரா வென்று சகலரும் போற்ற
சாற்றினேன் வீரபத் திரனே.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2. | 1 | திகந்ழ்திவ | திகழ்ந்தவ |
| 5. | 14 | சந்தது | சந்தநூ |
| ,, | 20 | செனு | சொனு |
| 8. | 6 | செனு | சொனு |

9-வது பக்கம் 13-வது வரிக்குகீழ் சேர்த்துக் கொள்க

பூகரங் கொடு உனதிரு காண் மிசை
தூவியன் பொடு பணிவர்க நோப் கவி
பூருவஞ் செப் வினையை சமாரம்பி டயிலோனே

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10. | 2 | மாகிய | மாகி |
| ,, | 11 | பானுஞ் | பாவினுஞ். |





சிவமயம்.

வேலுமயிலுந்துணை.



## வெண்பா.

---

சீரோங்கு தெய்வ சிகாமணியா மேரம்ப
பேரோங்கு முன்னவனை பீடுற்ற—ஏரோங்கும்
ஞானகுரு தேசிகனும் நற்குகனை நம்முளத்தே
யூன மறக் கொள்வோ முவந்து.

### 2-வது.

ஐயனே உனையல்லாமலே துதி
செய்யனே பிறதெய்வங்களை—முரு
கையனே யுனை கைதொழு மன்பர்க்கு
மெய்யனே கதிர் வேல் முருகேசனே.

தனத் தனத்தன தானன தானன
தனத் தனத்தன தானன தானன
தனத் தனத்தன தானன தானன—தனதானு.

### (என்ற மெட்டு).

---

அகப்பி றந்திடு நாண்முக னெனி
லுதித்தி டுங்கொடி தாகிய லோபர்க
ளகத்து கந்துற வோர்படு பாவியர் நிர்மூடர்.

அறத் திகழ்ந்திவ ராவர சானவர்
சினத்தை யும்பரி பாலின ராசுள
ரழுக்கு றும்பர வேசைய ராசையி ஹுறவாமோ

மருத்து வம்பெரு மாமுனி வோர்தரு
தமிழ்ச் சொலும்புல வோரடி யாருட
மனத்தி லங்கிய வாழ்கரு ணாகர குருநாதா

மணிக்க டம்பணி மார்பனே மாமறை
துதித்தி டும்பொரு ளேகும ரேசனே
மறுப்பொ டித்திடு வோனினி யோயுன திருபாதம்

மிகப்ப ணிந்திட வேதமி ழோதிட
நினைத்தி டும்பொழு தேமயி லேறியென்
விழிக்கு முன்தய வாய்வர வேணுமே யருளானே

விடத்தை யும்பரி வாயமு தாகவே
புசித்தி டும்சிவ ஞருமை பாலனே
விதிக்கி டும்சிறை யோனென வேதிரி புவிமீதே

தகுத்த ஜெந்தரி தாகிட ஜேகிட
தகுத்த ஜெந்தணா தாகிணா ஜேகிணா
திமித்த குந்தகு தாதிமி தோதிமி திமிதோதி

ஜெணுத்த திங்கக தோமென வேநட
மிடுப்ப சுஞ்சிகி மீதுரை நாதனே
திருப்ப ரங்கிரி மேவிய வாழ்வுறு முருகோனே

ஆரண மிகவே மொழிந்தவ ராவது
மாதவ மிகவே புரிந்தவ ராவது
ஆகம கலையா லுயர்ந்தவ ராவது பலதேவர்

ஆலய மிகவே பணிந்தவ ராவது
மேலவ ருறவா யிருந்தவ ராவது
ஆசில ருளமே குவிந்தவ ராவது புவிமீதே

தாரண மணிமார் புனைந்தவ ராவது
பூசையின் மிகவே சிறந்தவ ராவது
தாமரை மலரா லிலங்கின ராவது வெகுகோடி

தானிதி மணி வீடிருந்தவ ராவது
பானய மிகவே பகர்ந்தவ ராவது
தானுனை யுளமே நினைந்தறி வோர்களே          சிவயோகர்

காரண வடிவா யமைந்த தயாநிதி
பார்வதி புதல்வா சுகந்தமு மேவிய
கானகக் குறமா தணைந்திடு மாசறு          மணிமார்பா

காமனை யனலா யெரிந்திடவே ரதி
மாதுள மிகவே தெளிந்திடவே விழி
காதுள னுனதாள் பணிந்திடவே யருள்          புரிவாயே

வாரண முகமா யிலங்கு கணேச
விநாயக துணைவா நினைந்தரு பூரணை
மாமதி முகவா புகழ்ந்துனை நானுமே          தமிழோதி

மாசறு மனதா யிருந்திடவே யருள்
தாதிமி யெனவே நடம்புரி மாமயில்
வாகன திருவா வினன்குடி மேவிய          முருகோனே

இளகிய மனத்தன் பாயருளைதனே
புனைவிட ஜெகத்தின் பாவிலை தேவர்க
ளிதுவரை யினிற் கண்டேனெனை யாளவே          நினைவாயே

இருதய மிகச்சஞ் சாரம தாவதை
யறிவது மறிந்துன் பாலணிலை செல
இகபர சுகத்தின் பாவல னருமே          குருநாதா

புளகித தனத்தின் பார்வதி காரணி
திரிபுர தனைச்சங் காரிபை பூரணி
புவியினின் மிகுத்தன் பானம னென்மணி          சர்வாணி

புதல்வனே யுனைக்கண் டாலறி வாகிய
தமிழினின் மிகப்பண் போதுவர் மாமறை
புகலறி தெனச் சிந்தாமணி யாகிய          குமரேசா

மழுவது கையிற்கொண் டாறணி வேணிய
ர்ருண்மொழி செவிக்கங் சர்யுப தேசிக
மகவென தமிழ்க்கன் பாகிய தேவரீ ரிருபாதம்
மகிழ்வொடு மனத்தன் பாயுண ராதவர்
கெடுதலே கொலேக்கங் காவர லாமலே
மடுநரக கதைக் கொண் டேடில ராவரே புவிமீதே
பழமது தனைக்கண் டேயுல கேழையு
மொருநொடி யினிற்கங் கேயுதி வீரனே
பரரக சியகந் தாபரி பூரண மதியோனே
பலபல வனச்சஞ் சாரமதாகிய
மயில்மிசை யுனைக்கண் காணுவ ராதவர்
பதிபுகழ் திருச்செந் தூரினில் மேவிய முருகோனே

ஏமம தனில்விளே யாடிய நாகிள
தாகிய பிறையது சூடி யுமாபதி
ஈசுர னறுபொறி யாலுரு வாகிய குமரேசா
ஈவது புகழறி யாதவர் தீயர்க
ளாரெனி லுனைநினை யாதவர் பாதக
ரீனர்க ளிவரென வேதமி ழோதுதே குருநாதா
பாமர ரிடமதி லேதமி ழோத
விடாமலே யருள்புரி வாயுனை யானுமே
பாடிட மன்தினி லாசைய தாகுதே வடிவேலா
பார்வதி திரிபுரை வேணி கல்யாணி
மனோன்மணி மதிமுக வாணி சர்வாணி
கபாலி கமலநிகர் பாணி பராபரி யருள்பாலா
காமரு வியகுற மாதணை மார்பனே
மாமறை முனிவர்கள் பூசித நேசனே
காசினி முழுதுள ராசைய தாய்வர நினைவாயே
காரண குருவென வேயவ தாரசு
ரூபம தெனபரி பூரண மாபிர
காசித மதிமுக வாச வுலாசனே எனையாள்வாய்

தாபக ரிசகரி காமப தாரிச
ரீரிரி ரிகசரீ காவென யாழிசை
சாரசு மிகலய தாளம் விடாமலே சுதிகூட்
தாதரி கிடதக தோமென வேநட
மாடிய மனுதய பூசித மாமறை
தானது துதிதிரு வேரக மேவிய முருகோனே

உனதிரு பதமலர் நம்பினோர் யாதுமொரு
விசனமத னில்மன நொந்திலா ரீதனியி
லுலகினி லுனைவிட தந்தைதா யார்சொலு குமரேசா
உதிதிரி பிறையணி செஞ்சடா தாரியருள்
மதலைய தெனவரு கந்தனே நீயுமென
துளமதில் குடியென வந்துவாழ் வானதருள் புரிவாயே
தனதன தனதன தந்ததா தானதன
தெனவுமே தமிழ்சொல சந்ததா லோதபதந்
தனிலுன தருண்மிக தந்ததா லாதியினி லருணேசன்
தணதண தணவென வந்ததால் பாவுரைசெய
தனனென கிடமன தெந்தநா லோதினது
சரிசரி யெனவுமே வந்தபா ரீவாதினது மகிழ்வாயே
கனகுழ லழகிய மங்கைமீ தாசைநிதி
மிசைசெலு மனதுல கெங்குமே ஞானநிதி
கதிர்மணி குகன்மிசை தங்கினு லாசிலர்க ளறிவோரே
கனகம தனிலொளி தங்குமா தோகைமயில்
மிசைவரு பொருளுனை செங்கையா லாரொருவர்
கசடற குவிவர்கள் சங்கமா மேலவர்கள் பணிவோனே
தினதின தரிகிட தந்ததா தாதரிக
தகதக தரிகிட தந்ததா தாணதகு
திகுதகு திமிதிமி திந்தா தாதிமித திமிதோதி
தகுதிமி திரிகிட தந்தஜே ஜேதணாத
தொகுதொகு தொகுதிமி தொந்ததோ தோதிமித
திமிதக திமியென குன்றதோ ராடல்புரி முருகோனே

184428

ஊழியிலு தித்தமெஞ் ஞானக்ரு பாகர
நீயுமே மிகத்தய வாயெனை யாள்லதை
ஊமெென மறைப்பொரு ளோதுதே யாதரி யருளோனே

ஊமெென மணிப்புய நாகிய காரண
னீயெனத் துதித்திடு வோரடி யார்களில்
நாமெென வெதித்தவ ராவிச மாரம் டயிலோனே

ஆழியி லுடைப்புவி யேழையு மேவல
மாயொரு நொடிக்குளே மாமயி லேறியே
ஆறிருவி ழித்தய வாரிதி வேலெ வருவோனே

ஆகமக லைக்கிறை மாமறை யோதிய
நாதனே யுனைப்பணி வோருள மேகுடி
யாயறு தலத்தினி லேயுறை வோனென தமிழோதி

வேழம தனப்புவி மீதினி வியானின
தாதர வுயிர்த்த வானது மானல
விவேகம தெழிற் பாவல ராய்சமே நிறைவாக

வேபெற மனத்தய வாயருள் வாய்ஜக
தீஸ்வரி யறத்திகல் யாணிசர் வாணிசா
வேஸ்வரி மதிச்சண் வேணிம னோன்மணி யருள்பாலா

வாழிய தெனப்பர் பூரண மாமதி
போலுல கதிற்பிர காசித ஞானமே
வாசனைமி குத்திடு நீபபு யாசல குமரேசா

வாரண முகத்தீச சோதர காரண
தேவனே பந்தத்தவ தாரசு ரூபனே
வாழியப ழத்துதிர் சோலையில் மேவிய முருகோனே

எருக்கு தும்பையை முடித்த செஞ்சடை
எழிற்பெ ருஞ்சிவ னுபதேசா

எனைச்ச கந்தனி லுனைப்ப ணிந்தவ
னெனச்சொ லும்படி யருள்பாலா

மருக்கொ ழுந்துமல் லிகைச்சு கந்தமு
மலர்க்க டம்பணி மணிமார்பா

மணத்தி லன்பொடு குறக்கு லந்தரு
மணித்த னந்தனை யணைவோனே

உருக்கி லும்பல மிகுத்த சிந்தைய
ருலுத்தர் வஞ்சக குறவாமோ

உளத்தி லுந்தனை நினைத்து பைந்தமி
ழுரைத்த மைந்தர்க ளடியார்கள்

திருக்கு சிந்தையை யறுத்து நின்பதம்
செலுத்து சிந்தையை யருள்வோனே

சிவக்கொ ழுந்துமை யருட்கொ ழுந்தென்
திருப்ப ரங்கிரி முருகோனே

ஏனலி லேநடு வாயெழி லாய்பர
ணேரிகை யனொரு கவுண்வீசி

ஏலல பாவினி தாய்சொலி பேதனி
யேயுரை மாதினை யணைவோனே

மானல மாதினி வேணிய னருமை
மாமக வாகிய குமரேசா

மாமணி யாரம தாயணி மாபுய
மாதவ னார்திரு மருகோனே

பானல் மாயினி தாகிய தேனென
பாமல வாய்சொலி முழுலோபர்

பாலலை யாதெனை யாளவே நீவிழி
பாரிது வேலையில் வடிவேலா

தீநலதே கொடி யோருற வாயெனை
சேரவி டாமலே யுனோடி

தேசுற பூசையி லாசைய தாயருள்
சீரலை பேவிய முருகோனே

ஐயம்புல ஞனமெதா டங்கிவி சாரமோ
டஞ்சிய லோபரை யுறவாடி.

ஐந்தரு பூரண சுந்திர மாமுக
வைங்கணை வேளென வெகுவாய்நல்

இன்பம தாமது ரம்பெறு பார்வையி
சைந்திட வேசெவி பொருடேடி

இன்சொலின் மாதர்சு கம்பல வாய்மகிழ்
வென்பதி ஞனுட லழியாதே

நின்பத மேபணி யன்பதிலே யொரு
நிந்தையி லாமலே யருள்வாயே

நின்செய லேயலா லென்செய லேதுநி
னைந்தில னேயினி யெனையாள்வாய்

செப்பொனின் மேருரை சம்புச தாசிவ
செஞ்சடை யீசுர குருநாதா

செம்பது மாசன மும்பல வாயுறை
செந்திரு வேரக முருகோனே

ஒன்றிணு லேவசிய வொன்றிணு லேகனமு
மொன்றிணு லேபகைகள் பிணியோடல்

ஒன்றிணு லேசொலக ளொன்றிணு லேவிரக
மொன்றிணு லேயசைவி லருளாதி

என்றுகூ றன்ரையு நினைந்துபூ தூவியென
தெந்தையே நீதுணைய தெனையாளே

என்றுநூற் பாவுரைசெய் தன்பரா சோர்மனதி
லென்றுவாழ் வானதருள் புரிவோனே

கன்றுதா னேகதர வுங்கணு லேபசுவு
கண்டிரா தேயுலகி லதுபோலே

கந்தவே ளேயுனது சிந்தைதா னேமிகவு
சந்துநீ சேயர்கள்முன் வருவாயே

குன்றுநே ரானதர விந்தநே ரான்தன
கும்பநே ரானமுலை — மணியாலே
குப்பலாய் வேடர்மிசை யன்புகூர் வானுலகு
குன்றுதோ றாடல்புரி — முருகோனே

ஓசை யின்கட லரியணை யாவிலை
மீதி லூந்துயி லுவனளி னுசன
வேதி மன்கணி லரியவோ னுதர — னுபதேசா
ஓத ருங்கலை சதுர்மறை யோர்பல
பாவி னஞ்சொலு மவருட லாவிய
தோமொ னுஞ்சர வணபவ னாகிய — குமரேசா
பூசை யின்கனி வுளமிகு கீரனை
சூழி டஞ்சலை யகலவை வேல்விடு
பூவி லப்புய மலரிணை பாணிய — னெனவோதி
ஆசை யின்பிணி கொடிதுள தாகிய
பாச மென்றுலை கினிலறி வாரிலை
யாச லப்புவ துனதரு ளால்பணி — யுளதாமா
ஆக மங்களி லுனைவிட வேறொரு
தேவ னுஞ்சொன திலைநிச மேயெனை
யாள வுங்கனி வுளமதி லேநினை — புவிமீது
வேசை யின்கனி வலையினில் வீழ்குவ
ராசு ளம்பெறு மவர்மிசை பாசொலி
வேதை யென்பதி லுருகவி டாமலே — யெனையாள்வாய்
வேயி லங்கிய கமுகுப லாபல
சோலை யங்கிரி யதனிலே மேவிய
வேளெ னுங்குக னெனவடி வேலணி — முருகோனே

ஔவையெதி ரிள குருமீது மைந்தொரு
கனிதனை கிளிபுவி பாலெ ரிங்கனை
யவள்கர மிரையெடு போத முந்திய — மணனூதி

அனலது சுடுமென கூற வஞ்சின
முதிரவே பிரசன மாகிய யுந்தமி
ழறிதநி னெடுபொரு ளேயறிந் திடு — குமரேசா

இவைதிரி பிறையணி வேணி சுந்தரி
யொருகுழை விமலிநல் யாணி சங்கரி
திரிபுர தகனிக பாலி யம்பிகை — திரிசூலி

இமையவ னுதவிய மாதி ளங்கிளி
யுமையவ ளமலிமெஞ் ஞான மின்கொடி
திருபுர தருமவி சாலி தந்தருள் — குகவேளே

கவைமலை தினவன பாலி னுர்பர
ணதின்மிசை யிளிதுள பா னுஞ்சொலி
கரமதி லொருகவண் வீசி பைங்குரு — விகனோடே

கவிகவி ரெனகொடு காவ லுட்புரி
மடமயி லெழிலுள பூர்ண சந்திர
கலைமுக குறமக ளேய ணைந்திடு — மணிமார்பா

சுவைபன பணிகலை யார ணங்கினை
யுலகினி விதுவெரி தாமெ னுஞ்சொலி
அருமதி புரி வர் நேச முங்கன — விலுமாமோ

சுபமது பெறுகதிர் வேல னும்பன்
னிருகவி சொனேனெனை யாள்வை யுன்றனை
துதிசெய கதிபரு ளாவி னன்குடி — முருகோனே

---

௯

## கீர்த்தனை.

(இராகம்—ஆனந்தபைரவி).

பல்லவி.

அனுக்கிரகஞ் செய்வாய் — எங்கள் மீது தயவுசெய்து
அனுக்கிரகஞ் செய்வாய்

## அநுபல்லவி.

மனுக்கிரங்கி நீயெந் தனுக்கிரங்கியே யருள்
மால்மருகனே வடி வேல்முருகனே குற
மாது தெய்வானையை மகிழ்வொடு தழுவிய
கர்தலனுன் திரு கழலிணை துதிசெய (அனு)

## சரணம்.

ஜெகமதிலுந்தனிரு பாதம் பணியவே
சமரசகுணமெஞ்ஞான போதம் இன்பசுக
சுபமுங்களிவி நோதம் தருமென
சொல்லுங்கலைகள்சதுர் வேதம்
பகருர்நின்வரப்பிர சாதம்
மிகவுர்ணைந்தமிழ்க் கீதம்
பகர்ந்திடக்கொடு
பலவினைமுழுதுமே
தகர்ந்திடச்சிவ
சரஹணபவநம (அனு)

வந்தனைசெய்துன்னையின்பமாய்த்துதி செய்யும்
மைந்தருக்கல்லோவி வேகம்
சிந்தைமகிழ்ச்சிகன யோகம்
செல்வமுண்டாகுர்வஜ்ர தேகம்
சந்ததப்புகழ னேகம்
வந்துசேருமிந்தர போகம்
தந்திடு பொருள் ஷண்முகநினதுமுன்
வந்திடும்பொருள் வளர்சிவஹரஹர (அனு)

சங்கரனுமையுதவு பாலா கதிருள
தண்டை சிலம்பு பணிந்த காலா மதியுள
வெங்கய முகற்கிளைய சீலா கதிர்
வேலன்றமிழ்க்கனு கூலா

செங்கையணி வடிவேலா
பங்கயன்றனக்கு மேலா
தேசிகனேயென சிவனிடமேயுப
தேசிகனென்னவளர் சிவசிவ ஹரஹர (அனு)

(இராகம்—கல்யாணி.)

பல்லவி.

ஆறுமுகதெய்வமே யுனைநம்பினேன்
ஆறுமுக தெய்வமே

அநுபல்லவி.

வேறுவினை வரிலதைக் கூறு செய்திடுவாய்வடி
வேலனே குணசீலனே யுமை
பாலனே யனுகூலனே ஹரஹர (ஆறு)

சரணம்.

தஞ்சமென்றுனைத் தாங்கும் சேயே யார்க்கும்
தாய் தந்தை குரு தெய்வம் நீயே
வஞ்சம் செய்யாதென் முன் வாயே வந்து
மனமகிழ்ந்தெனை ரக்ஷிப் பாயே
சஞ்ச மலரிலுறைவஞ்சி பொன் மருகனே
நின்செயலெனவும் ப்ரபஞ்சமதில் மகிழும் (ஆறு)

சித்திர மாமயில் வீரா கெஜ
சிங்கமா சூரசம் மாரா சங்கரி
பத்திரகாளி முன் னேரா யாடும்
பரமனருளுங் குமாரா
சக்தியதாகிய வெற்றியுள் வேலைப்ர
சித்தமதாயணி கைத்தலனாகிய (ஆறு)

பதியணி சிவகுரு நாதா குற
வள்ளி தெய்வானை சமேதா முது
மறைபுகழும் பொற் பாதா அன்பர்
முத்தமிழ்க் கருளும் ப்ரக் யாதா

புதிய வமுதெனமதுர மெழுகவி
கதிர்வேலனனு தினந்துதி செய்யாகர (ஆறு)

(இராகம்—பிலஹரி).

பல்லவி

இதுவே சமையமையா தயவு செய்ய
இதுவே சமையமையா

அநுபல்லவி.

விதியவனே முனிந்த மெய்யா முருகையா (இதுவே)

சரணம்.

மனதின் குறைகளோட மலர்மா தென்பங்கில்நாட
நினைக்கப்பொருள் கைகூட நின்மேல் கவிதைபாட (இதுவே)
தஞ்சமென்பரன்பர்ப்ராண சஞ்சீவி நீதயவு தோண
வஞ்சமென்ன இன்பம்பூண மகிழ்ந்துநின் பாதங்காண
(இதுவே)
வாடினேன் வறுமையாலே வருந்தினேனே தேவனைப்போலே
பாடினேன்பார் கதிர்வேலே பார்கருணையங் கண்ணாலே
(இதுவே)

(இராகம் புன்னுக தோடி).

பல்லவி.

ஈராறுகைவேலிருக்க யாராரு பகைவந்துனை
யென்செயலாகுஞ் சொலுவாய் நெஞ்சமே யஞ்சாதே

அநுபல்லவி.

காராரும்பூங்குழல் வள்ளிகயமின் கொழுனன்பதமே
கதியென்றனு தினமுந்துதி
செயவுந்தய ரகலும்பிணி
விலகுங்கலி தலையும்பவ
ஜனனந்தனை பிலையென்றறி (ஈராறு)

சரணம்.

சத்திய முங்கலையுணர்வும் கர்மமும்விடாதே
தையலர்மேல்மையல் கொண்டு தயங்கியே கெடாதே
பக்திமான் களைத்துறத்தி பாவியர்க் கிடாதே
பகையும் பழிபவமும் புலைபயமும் பெறுஜெனனுஞ்சிவ
முருகன்றனை தொழுதுங்கதியடையும்படி நிலைகண்டறி
(ஈராறு)

மாதாபிதா குருதெய்வத்தை மறந்து யிகழாதே
மனைவிமக்கள் திரவியத்தை வாழ்வை மகிழாதே
சூதுவஞ்சர் மீதிற்கவி சொல்லி புகழாதே
சுசுமும் பெரிதல சந்தன களபம் பெரிகல கந்தனை
மிகவும்பெரிதென வுங்களி சொல்லியின்பமே
யடையுங்கதி (ஈராறு)

கதிர்வேலனென்று சொன்னால் கலங்குமோ விண்ணாடு
கலிகாள மேகமென்றால் புவியினில் யாரீடு
சதுர்மறைகள் புகழுங் குருசாமிதனைத் தேடு
தகஜந்தரி கிடஜெந்தண தகடிங்கென நடனம்புரி
சிவசங்கர னுமையுந்தரு புதல்வன்றனை கெதியென்றிரு
(ஈராறு)

(இராகம் காம்போதி).

பல்லவி.

உனது பதமலரை மனதி னினைந்தவர்க்கு
ஊழ் வினை யணுகாதே (உனது)

அநுபல்லவி.

அனமிசை யேறிய அயனைச்சிறையில் வைத்த
ஐயனே மெய்ப்பொருளாகிய தெய்வமே
தனதுடனே யனுதினமும் வேல்முருகனே
தான் கதி எம்மை ரக்ஷிப்பாயென்றே யொருதரம்

சரணம்

முருகனே சிவசரவண பவனே    கய
முகவனுக் கிளைய நாதா    ஹரி
மருகனே யமரர்கள் சிறை தவிர்த் திடும்
சுப்பிர மண்ய னெனும் பிரக்கியாதா
அறுகுதும்பை கொன்றை யணிசிவனருள் பாலா
அசுரர்கள் குலங்களை யறுத்திடும் வடிவேலா
உருகுமடியார்களை ரக்ஷிக்கு மனுகூலா
ஒலிசிலம் பொடுதண்டை யணியும்பொற் காலா (உனது)

தேசத்திற் கண்கண்ட தெய்வ நீஎன்குல
தெய்வமும் நீ யாதலாலே ஆசா
பாசத்தி லகப்பட்டு பிரியம்வைத் துந்தனை
பாடினே னொருக்காலே
வாசவ னமரர்கள் முனிவர்கள் தொழுதாளே
வணங்கு தற்கெளி தாமோ
மனிதருக் கின்னாளே
நேசமாய் சிவனுப தேசிகச் செவ்வேளே
நித்தியா நந்தபரி சுத்தனே எனையாளே (உனது)

காதலா லுனைத்தேடியே வேதவியாசனுங்
காசிபன் கோசின் தானே செய்த
மாதவத்தி னல்லோ அதிகப்பிர பலமானார்
மகிமையென் சொல்வேனே
சாதியினா லென்ன விவேக மதினாலே
சபாச குணத்தினா லுயருவர் மென்மேலே
ஓதுதலா லுமொண்க்கவிக் கதிர்வேலே
உகந்து ரக்ஷிப்பாய் மனமகிழ்ந் [illegible] யன்பாலே (உனது)

(தருவு—இராகம்—காபி.)

பல்லவி.

ஊழ்வினைக் கவிழ்தந் தந்தாள்வ தின் துணையல்லா
லுலகத்தி லொருதெய்வ முண்டோ

அநுபல்லவி:

தாழ்வினை யகற்றியே வாழ் வினையைத்தருஞ்
சண்முகக் கடவுளே நின்பதமே கெதி
சனங்கண்டிரு தனங்கொண்டனு
தினஞ் சிந்தையில் நினைந்தன்பர்கள்
தமையுளமதி லமை யதுனது சுமை
மணி யருளுடை புதல்வனே (வளம்)

சரணம்.

உனது கருணை விலாசந் தங்கின பேர்க
ளுலகத்தில் வெகுபல தேசம்கேட்கவே சற்றும்
மனது வருமோ உந்தநேசம் பெருமல் கவி
வழுத்துவதும் பிரயாசம் ஆதலா லுன்றன்
தனதுஞ் செயலும் பாதம் புயமுந் தயவுந்துதி
தனையும் பன்னிருவேலுந் தனையும் நம்பினே னது
சகஞ் சந்ததி எனும் பைந்தமிழ்
சொலுந் தந்திர விதந் தந்தருள்
தனம் பெரிதென மனந்தனிலென
கனந் தருமனு தினந் தரணியில் (வளம்)

உலகத்தில் பலபல பேதஞ் ஜென னமெடுத்
துறைப்பது நடப்பதனீகம் ஒருவர்க்கொருவர்
கலகத்தை எழுப்பும் விரோதஞ் செய்வதல்லால்
கனவில் நினையாருந்தன் பாதந் தனைமறந்து
கடுஞ் சஞ்சல மெனுந் துன்பமே
யடைந் துன்றனை நினைந்துன் கிருபை
தகிபெற உனை தாகி
செப வருள் [illegible]கி
தனில் தயா நிதி கொடிதுள (வளம்)

சரணியில் புகழ் பரஞ்சோதி எனுஞ்சிவ
சண்முகா உந்தன் விபூதி யணிந்தவர்க்கு

மரண ஜெனன வியாதி யகலும் நின்
மகிமை சொல்வேனூ லோதி கதியடைந்த
அருணகிரியி நாவில் 'வருங் கவிதையைப் போல
அருள் செய்யுங் கதிர்வேல ளிருதயந்தனில் மேவி

அனந்தந்தவ மிருந்துந்தனை
நினைந்தன்பொடு பணிந்தன்பர்க
ளகந்தனி லுறை சுகந்தனை யறு
முகந்தரிசனை ஜகந்தனில் கொடு (ஊழ்)

(இராகம்—செஞ்சுருட்டி.)

பல்லவி.

எல்லா முனது செயலல்லா லுலகிலுண்டோ
வில்லார் கலாபமேறும் உல்லாச வடிவேலா (எல்)

நல்லார்க ளாவதும் பொல்லார்க ளாவதுங்
கல்லார்க ளாவதும் வல்லார்க ளாவதும் (எல்)

வாழ்வதும் புவியினை யாழ்வதும் வறுமையால்
தாழ்வதுங் கொடுவினை சூழ்வதுஞ் சிவன்செயல் (எல்)

நாடுவதும் பொருள் தேடுவதுஞ் சபை
கூடுவதுந் தமிழ் பாடுவதும் முதல் (எல்)

சீலமென்பது மனுகூல மென்பது மாதி
மூல மென்பதுங் கதிர்வேல னென்பதுந் தமிழ் (எல்)

(இராகம்—சங்கராபரணம்.)

பல்லவி.

ஏழைக்கிரங்குந் தெய்வ நீயே உலகமதில்
வேழமுகர்க் கிளைய வேலா யுமை பாலா
இவ்வேளை யிலெனை
யாளவே நினைகுவாய் (ஏழை)

அநுபல்லவி.

நீதந்தெரிந்துஞ் சதுர் வேதந் தெரிந்து ஞான
போதந் தெரிந்து மின்ப கீதந் தெரிந்தென் பலன்
நின் பதமே துதி யன்பலவோ கெதி (ஏழை)

சரணம்.

தேகமெடுத்தாலறி வாகம் பெறுதல் சிவ
யோகம் பெறுதல் நல் விவேகம் பெறுதல்
சந்திரசேகர னருளுங் கிருபாகர (ஏழை)

தரலம் புகழுங் கதிர் வேலன்றமிழ் புனைந்த
கோலாகலப் பிரபெனும் பாலசுப்ரமணிய
சரவண பவநம ஹரஹர வெனதுதி (ஏழை)

(இராகம்---சௌராஷ்டகம்)

பல்லவி

ஐயா முருகையா நீயே
மெய்யா வந்தருள் செய்வாயே (ஐயா)

அநுபல்லவி.

செய்யாள் மருகா சண்முகா
தேசிகா ஜெக ரக்ஷகா (ஐயா)

சரணம்.

பைரவம் பூண்டசிவ பரமனருள் குரு
பரனென உனைதுதி செய்யவு நினைந்தேனுந்தன்
திருவடி சுதிபனில் மறுபடி கெதியிலே
தய்யனே எந்தன் மனது
துயரமே யடைவது நயமல புவியினில் (ஐயா)
சூது வஞ்சகரைப்பாடி சுகமிலே எனவுமே
யகமதில் மகிழ்வொடு
ஓதுகிறேனின்மீது தமி
ழன திருதய மதில் நினை எனை யடிமைகொள்
போது முச்சகங்க ளெல்லாம்
புகழுமே யறிவுள ரகமதிலிலகிய (ஐயா)
பாலயன் சடவுளென வருபொருளினி
மணிமொரு பொருளென உமை
பாலனெனவே யுலகில் (ஐயா)

பகருவ ரிகபர சுகமது பெற கதிர்
வேலனுந் தமிழின் கீதம் வெகு
நயமொடு சொலவுமே மகிழு டன் (ஐயா)

(இராகம்—தோடி.)

பல்லவி.

ஒருதரமுன திரு சரணந்தனை நினைந்தால்
மறு ஜெனன மில்லையே முருகையா

அநுபல்லவி.

அருளெனும் மெஞ்ஞான பொருளெனும் பரப்பிர்ம
சுரூப னெனுஞ்சிவ சரவண பவவென்றே (ஒரு)

சரணம்.

காடுமலைகள் சுற்றி யலைந்தென்ன சாரம்
கைநோக மெய்நோக கால் நோகவே கோரம்
பாடு படுவதல்லால் வேருபகாரம்
படையார்க ளுறவை நம்பாம லென்னேரம் (ஒரு)
மாதர்க ளாசை வலையதி னாலே
மயங்கி யுடல்கள் மெலிந்தொருக்காலே
வாதனை யடையாம லறிவுளோர் போலே
வந்தனை செய்தஞ் செழுத்தோதி யன்பாலே
ஐம்பூத்தோ ரக்ஷரப் பொருளெனவே யோதி
யம்பிகை தருங் கருணைநந்த ஜோதி
சம்புவே யன்புவைத்துந்தன் விபூதி
தானணிந்தே கதிர் வேலன் றமிழோதி (ஒரு)

(இராகம்—மத்தியமாவதி)

ஓம் நமவென்ற மெஞ்ஞான கிருபாகரா
ஆம் நமவென்று சுரூபா மென்றோதும்
அன்பர்க்கிரங்குந் தெய்வஞ் சம்போ சதாசிவ (ஓம்)

ஓராறு முகசீலா ஈராறுகை வேலா
நீ பாதார நிருமயமூலாதாரா யுமைபாலா (ஓம்)
போதெடுத்துனது தாளே காதலாய்த்துதி செய்வேளைமீதில்
மாதய வாகிய வேளே தயவா எனையாளே (ஓம்)
கதியருள் விலாசனே கதிர்வேல னேசனே
துதி முருகேசனே சதுர் சுருதி வாசனே (ஓம்)

(இராகம்—மத்தியமாவதி.)

| | | | |
|---|---|---|---|
| ஔ வெனுமக்ஷரா | நமோ | நமோ | திரி |
| யம்பிகை புதல்வா | நமோ | நமோ | ஓம் |
| சௌவெனுமக்ஷர | நமோ | நமோ | சிவ |
| சரவண பவனே | நமோ | நமோ | ஓம் |
| சுந்தாய நமவே | நமோ | நமோ | ஓம் |
| கயமுக துணைவா | நமோ | நமோ | ஓம் |
| சந்தன புளகிதா | நமோ | நமோ | ஓம் |
| சண்முகா ஹரே | நமோ | நமோ | ஓம் |
| பரபிரம சுரூபா | நமோ | நமோ | ஓம் |
| பாலநேத்திரவ தாரா | நமோ | நமோ | ஓம் |
| திரிபுர தசனு | நமோ | நமோ | ஓம் |
| சிகி வாகனுயூ | நமோ | நமோ | ஓம் |
| சமரச குணகர | நமோ | நமோ | ஓம் |
| சத்தி தாரயா | நமோ | நமோ | ஓம் |
| கேசவன் மருகா | நமோ | நமோ | ஓம் |
| கிருத்திக சூனுவே | நமோ | நமோ | ஓம் |
| கோசனுட் பொருளே | நமோ | நமோ | ஓம் |
| குகாய நமஹரே | நமோ | நமோ | ஓம் |
| துவிசடா புபா | நமோ | நமோ | ஓம் |
| சுப்பிரமண்யாயா | நமோ | நமோ | ஓம் |
| துவி சந்திராயா | நமோ | நமோ | ஓம் |
| சொற்பொருள் குமரா | நமோ | நமோ | ஓம் |
| சதுர்மறைப் பொருளே | நமோ | நமோ | ஓம் |
| சங்கரனருள் சுதா | நமோ | நமோ | ஓம் |

கதிர்வேலன் றமிழுக்கு நமோ நமோ ஓம்
கருணைப் பிரகாசனே நமோ நமோ

உயிரெழுத்து சந்த கீர்த்தனம்
முற்றிற்று.

---

## கதிர்வேற் கவிராயர் பாடிய வேறு சீர்த்தனம்.
## சுப்பிரமணியர் பேரில் பாடியது.

---

(இராகம்--தேசிக தோடி.)

பல்லவி.

கந்தா நீதான் எந்தன் மீதில்
கருணை செய்யா திருப்ப தேது

அநுபல்லவி.

எந்தன்குல தெய்வம் நீயே
எது பாரா முகஞ் சொல்வாயே
எத்தலத்தினி லுனையனி லருளுள
முத்தனத்துதி புரிபவரிலை இரு
கைத்தலத்தினி மலரொடு துதிசெய
சித்தியைத் தருமுத்தனே சிவகிரி (கந்தா)

சரணம்.

சத்திசிவ னிருவர் கூடி
சடமெடுத்து விளையாடி
சுற்றித் திரிந்துன்னை நாடி
துதி செய்து தமிழைப் பாடி
சுத்த வஸ்துவே எனஉன திருபதம்
நித்த நித்தமே துதிசெய மௌனதுட

சித்தமெத்தவே மெலிவது சரியல
சத்தி முத்தன் ஸ்ரீசிவ குருபர (கந்தா)

ஆசா பாசமே பொல்லாது
அதை விடவே உலகமேது
பாசத்தில் சிக்கிய போது
பரமனுன்னை கைவிடலாகாது

பத்த சித்தர்களை உலகந்தனிலே
நித்த மெத்தவே திரிவர்களதில் மனம்
பத்தி சுத்திய திலர் அவர்களை
சுத்தி சுத்தியே விழுவதிலென பலன் (கந்தா)

பதி முழுதும் புகழ் சிங்கார
பரமனுமையின் குமார
கதிர்வேலன் கலிக் குதார
கருணைக் கண்ணினாலே பாரா

கத்தி பத்தியினுலகமதனிலே
சுத்த பத்தமொடுபணி பவர்களை
நித்த மெத்தவே மகிழ்வுற நிலை பதி
சித்தம் வைத்தருள் புரிமுருகனே சிவ (கந்தா)

93/12-2-48

## 2-வது கீர்த்தனம் இராகம்.

### பல்லவி.

சற்றே கண்ணாலே பாரும் தயவுசெய்து
சற்றே கண்ணாலே பாரும்

### அநுபல்லவி.

சற்றே கண்ணாலே பாரும் தாய்தந்தை குருதெய்வ
பக்தியும் விஸ்வாசம் மனதிலன்பு
வைத்துந்த னருள்நேசம் பெற்றனனால
கத்தினில் பிரகாசம் உனதுடைய
சித்தமுஞ் சந்தோஷத்துடனே என்மேல் (சற்றே)

சதுர்மறைப்புகழ் குருசாமியென்றன திரு
பதமலர் தனைநாடி பரிமள
புதுமலர் தனைச்சூடி பகலிரவாய்
துதி செய்து தமிழ்பாடி நினைத்தபொரு
ளதுவுமே கைகூடி இருந்தனனிப்போ (சற்றே)

ஜெகத்திற்பிர காசிதத் தமிழ் சொலி உனதிட
மருத்துவ ப்ரக்கியாதி மகிமைதனை
நினைத்திட தமிழோதி துதித்ததனி
லகத்தினிலுனை யாதி வஸ்துவென்றனை
சுகத்துள் பரஞ்சோதி என்றன னன்பாய் (சற்றே)

சந்திரவதனி யுமைதந்த பாலனை சிவ
கந்தனை என்மீது தயவில்லா
தெந்த விதமென்றோது கதிர்வேலன்
பைந்தமி ழுனை விடாது நினைக்கமிக
சந்தோஷ மாயிப்போ மனமகிழ்ந்து (சற்றே)



முற்றிற்று.



# பேளூர் சுயம்புலிங்க ஈஸ்வரர் பேரில் கதிர்வேற் கவிராயர் பாடிய

# திருப்புகழ்.

சீதள கெந்தம் புனைந்த கொங்கையை
மூடுவள் சொஞ்சம் இரங்குகொண்டதி
தேசி பொருந்துங் குளிர்ந்த சந்திர முகமாயம்

தேடுவள் வஞ்சங் கலந்து ரஞ்சித
மாமொழி இன்பம் பகர்ந்து கொஞ்சிய
சேலையில் கண்கொண்டெரிந்து பஞ்சணை தனில்மேவி

மாதள இன்பம் புரிந்த மங்கையர்
போலவே நெஞ்சம் கனிந்தலைந்துர
வாவிரகந்தந் திணங்கு வஞ்சையர் வலையாலே

மாமதி யந்தந் திரங்களுங்கன
மேன்மை இழந்துந் தியங்கி சஞ்சல
வாரியில் அங்கம் கிடந்து துன்பமே யடையாமல்

மேதினி எங்கும் புகழ்ந்த கந்தனை
மீதய வின்பஞ் சிறந்த பைந்தமிழ்
மேன மும் பண்புகந்து தந்தனை எனையாளே

வீசு சுகந்தம் மிகுந்த கங்கைகள்
சூழ்வரை யகந்தந் துடங்கி பைர்புனம்
மேவி யனந்தர் புனர்ந்த திண்புய குமரேசா

தா திமி ஜெந்தந்தனத்த ஜங்கரி
தாகிட தொந்தம் ஜெனுந்த கந்தமி
தாதயவென்றாம் பொனம்பலத்தினில் விளையாடி

தானுமேவலிங்கம் சுயம்பு தங்கிய
வேள்விப்பிலங்குங் குழந்தை நின்பத
தாமரை தஞ்சப் புகுந்தனென்கதி முருகோனே

## 2—வது.

வாரியெடுத்து அணைந்திடு வஞ்சிய
 ரேவல் நடத்தி இருந்து இணங்கியர்
 மாயவிதத்தை புரிந்து வணங்கிய வெகுபேர்கள்
 வாச நிறைத்து குளிர்ந்திடு சந்தன
வாடை புகட்டி திமிர்ந்திடு கொங்கையர்
 வாசல் பனைக்குள் ளுழன்று சிணிங்கியர் சிலபேர்கள்
ஈரமதிக்குள முகந்தனில் மஞ்சளை
 பூசி மினுக்கிப ரஞ்சித வம்பிகள்
 ஈனர் நடத்தை மிகுந்திடு லண்டிகள் எவராலும்
ஈசர் பதத்தை மறந்திடுங் கொண்டிகள்
 ஆசைகொடுத்து மகிழ்ந்தழும் முண்டைகள்
 ஈரல் இறைச்சி கலந்திடு தொண்டிகள் ளுறவாமோ
பாரிலுனக்ககி என்று மனந்தனில்
 ஆவல் மிகுத்துமே தங்கிய பைந்தமிழ்
 பாடிப் பகரறிவுந்துதி இன்பமே யருள்வாயே
பாயிபதப் பொழி தந்திமுகந் தனை
 யோனை வனக்குற வஞ்சி செழுந்தன
 பாரமதிலப்புய முங்காரமுப்பட யணைவோனே
மோரவனத்திரு செங்கையர் செங்கணர்
 நாமகளுக்கிறை வன்புகழ் செங்கதிர்
 வேலனெனுஞ் சொலும் அரும்பொருளிங்கித குமரேசா
வீசு மலர்ப்புயல் தங்கி நெருங்கிய
 வாசமகில் புகையின் களப மகிழ்
 வேள்விபனற் பதி என்று வளர்ந்துறை முருகோனே

---

தானதத்தத் தத்ததத்த தானதத்தத் தத்ததத்த தானதத்தத்த
தான தான தான தான தான தான தனனான தனன தனனா



பூரணத்தை யுட்கருத்தின் னோடுவைத் திருக்குமுத்தர்
சேகரத்தின் மெய்பக்குருக்க ளாரெழுத்தை
யுச்சரித்து புகழ்ச்சி சொலும் புனிதர்
தமக்கருளுங் கடவுள் சுகத்திலுயர்ந்த தவநினைப்புள
[தொண்டரது
போகவெளி யூடுமலர் பூவின்மிசை யாடுகிற
தாளுடைய புத்திதரும் வாரி

சூரபத்ம நிச்சையிற் செய்தீமையை தவிர்க்க னத்தும்
வானவர்க்கிறக்க முத்து நீர்முதச்சடையிற் வைதர
துடர்ச்சி யினின்றனது நூதனக்கண் ணுயர்ந்த பொறி
டனைச் சொல வந்துருவ பெடுத்துயர் கந்தனனு
ஆகமு மலாதவடி வானபர ஞான சிவ
தேசிக சிரோன்மணி புதுகனகு வளையாதி

பூவொழிற் பொருந்த சத்தி வேலனைத்துதித்த
சேனை பிடித்தடைத்த புலைத்தொழிற் மிஞ்சுதிர
லறக்கியுடன் பெரிய மலைக்குகையின் பொடிய
விடுத்த கரங்கண்மிசை போரதனிலே வலிய
சேவன் முதல் லானபல சூடிய குமாரனுயர்
பொற்புடையதான மயிலேறி விளையாடும்

வெற்றிவேலுற்றதுணை.

